இதழ் 19 | சூலை | 2020

# தாயகம்

“ சாத்தன்குளம் கற்றுத்
தரும் பாடம் ”



# சாத்தன்குளம் கற்றுத் தரும் பாடம்

‘சியார்ச்சு பிளாய்டு படுகொலையின் சூடு தணிவதற்குள் தமிழகத்தின் தென்கோடியில் காவல் படுகொலை நிகழ்ந்து அதிர்ச்சி அளித்திருக்கிறது. காவல் படுகொலை ஒன்றும் தமிழகத்திற்குப் புதிதில்லையே! வழக்கம்தானே! என்று நம்மால் கடந்து சென்று விட முடியவில்லை.

சியார்ச்சு பிளாய்டின் கைகளுக்கு கள்ளப்பணம் எப்படி வந்தது என்று அறிந்து கொள்ள – உசாவல் செய்ய – எண்ணம் வரவில்லை அந்த வெள்ளைக்

‘காவலனுக்கு. அவரின் நிறமே அவனுக்கு குற்றவாளி என்ற எண்ணத்தைத் தந்தது. இங்கே சாத்தன்குளத்தில் அந்த மாதிரி குற்றம் ஏதும் இழைத்திடவில்லை திருவாளர்கள் செயராசும், பென்னிக்சும். சாத்தன்குளம் படுகொலை அதிகார நிலை நிறுத்தல் என்று எண்ணி விட முடியாது. மன உளைச்சலில் இருக்கும் காவலர்களின் மன அழுத்தத்தின் வெளிப்பாடு என்றும் மன்னித்து விட முடியாது. அது முற்ற முழுவதுமான ஓர் ஆதாயக் கொலை.

காவலர்கள் கை நீட்டும் போதெல்லாம் படியளக்க வேண்டும் என்ற ‘சுதந்திர இந்தியா’வின் மரபுரிமையை மீறிய குற்றத்தை அல்லவா செயராசும்

‘அவர் மகனும் இழைத்திருக்கிறார்கள். ‘நரிக்கு நாட்டாண்மை கொடுத்தால் கிடைக்கு இரண்டு ஆடு கேட்குமாம்’. கேட்டால் கொடுக்கத்தானே வேண்டும். கொடுக்காவிட்டால் என்ன செய்வார்கள்? அதைத்தான் செய்திருக்கிறார்கள். இதைத்தான் ஆளும் கட்சியின் ஊதுகுழல்கள், ‘கொல்ல வேண்டும் என்ற நோக்கத்தோடு அவர்கள் அடிக்கவில்லை’ என்று சப்பைக்கட்டு கட்டுகிறார்கள். இந்த ஊதுகுழல்களை எந்தநாளும் காவல் கைகள் தீண்டா என்பதை நன்கு உணர்ந்தவர்கள் அவர்கள். உயர்நீதிமன்றத்தை எள்ளி நகையாடிய இராசா சர்மா முன்பும் காவல் பாதுகாப்போடு தலைமறைவாக இருந்த

‘எசு.வி. சேகர் முன்பும் இந்தக் காவல் கைகள் பணிவோடு கட்டியபடி இருந்ததை சாணக்கிய பாண்டேக்கள் அறிந்துதானே இருக்கிறார்கள். எனவே அவர்களுக்கு இந்தக் கொலைகளின் வலி தெரியவே தெரியாது.

இனி வரும் காலங்களிலும் இந்த வலியை உணர மாட்டார்கள். ஏனெனில் ஆளும் வகுப்பைச் சார்ந்தவர்கள் அவர்கள். நாமோ என்றுமே இவர்களால் ஏமாற்றப்படும் எளிய மாந்தர்கள். ஒவ்வொரு நாளும் வலியோடு எழுந்து வலியோடு படுக்கைக்குப் போகிறவர்கள்; ஒவ்வொரு நாளும் நம் உறவினர்களின் இழப்புகளை

‘எண்ணி எண்ணி துன்பப் படுபவர்கள். அப்படியான மிகப்பெரிய துன்பத்தைத்தான் செயராசு, பென்னிக்சு ஆகியோரின் இழப்பு ஏற்படுத்தியுள்ளது.

இந்நிகழ்வில் சட்டப்படியான காவலர்களோடு காவல் நண்பர்களும் சேர்ந்திருக்கிறார்கள். இந்தக் காவல் நண்பர்கள் கொரோனா விழிப்புணர்வை எப்படி ஏற்படுத்தினார்கள் என்பதை விழுப்புரம் பாபு தன் முகநூல் பக்கத்தில் எழுதியிருந்தார். ஒரே தானியில் ஆறு காவல் நண்பர்கள் சமூக இடைவெளியோடு அதிகாரம் செய்து வந்ததைப் படம் பிடித்து

‘வெளியிட்ட போது பொறுப்பான காவல் அதிகாரி அப்படி படம் எடுத்து வெளியிட்டவர்களைச் ‘சமூக விரோதிகள்’ என்று திருவாய் மலர்ந்ததையும் அவர் வெளியிட்டிருந்தார்.

ஒரு நோயை எதிர்கொள்ள மருத்துவ ஆற்றலை முழுமையாக முடுக்க வேண்டிய அரசு அப்பொறுப்பினை காவல்துறையிடம் விட்டு விட்டு வேடிக்கைப் பார்க்கிறது. முகமூடி, ஊரடங்கு, சமூக இடைவெளி என்று வானம் ஏறி வைகுண்டத்தைக் காட்டுகிறது. இதோ மருந்து என்று கரடியாய் சித்த மருத்துவர்கள் கதறினாலும் ஏற்க மறுத்து தடியால்

அடித்து நோயை விரட்டி விடலாம் என்று எண்ணுகிறது. மகளை நோய்த்தொற்று என்று அழைத்துச் சென்றபின் தனிமைப்படுத்தப்பட்டு சொந்த வீட்டிலேயே பூட்டிச் சிறை வைக்கப்பட்ட நோயற்ற மூதாட்டி ஒருவர் சேலத்தில் இறந்த செய்தி வந்திருக்கிறது. நோய்த்தீர்க்கும் மருத்துவர்களையும் உசாவலே இல்லாமல் தடியால் தாக்கும் காட்சி காணொளியாய் வலம் வந்து கொண்டிருக்கிறது. தம் துணையாளரோடு தம் மருத்துவமனைக்குச் சென்ற மருத்துவர் புகழேந்தியை நடந்து செல்லச் சொன்ன காவல் அதிகாரத்தை நாம் கண்டிருக்கின்றோம்.

ஆனாலும் நோய்த்தொற்று குழுகத்தைப் பற்றி பரவி வருகிறது. துயரருக்குத் தேவை அன்பும் அரவணைப்பும். இந்த அரசோ அவர்களுக்குத் தந்தது தீண்டாமையும் அச்சுறுத்தலும். எப்படிப் போகும் நோய்?

குறித்த நேரத்தில் கடை அடைக்கவில்லை என்றால் நோய்த்தொற்று வேகமாகப் பரவி விடும் என்று அச்சுறுத்துகின்ற இந்த அரசுதான் – காவல் துறைதான் – தொழிற்சாலைகளின் வழியாக நோய் பரவிவிடும் என்று அஞ்சி தம் ஊருக்கு தொழிற்சாலைகளின் பேருந்துகளை அனுமதிக்க மறுத்த ஊர் மக்களைத் தளை செய்து மிரட்டி அந்த

பேருந்துகளுக்கு பாதுகாப்பு அளித்து தொழிலகங்கள் தடையின்றி இயங்க வழி செய்திருக்கின்றது. வணிகர்களை மட்டும் விரட்டோ விரட்டு என்று விரட்டுகின்றது. அதன் உச்ச நிகழ்வுதான் சாத்தன்குளம் படுகொலை.

இந்திய விடுதலைக்குப் பின் கல்கி எழுதிய புதினமான பொன்னியின் செல்வனில் ஒரு காட்சியில் தஞ்சை அரசரின் வேளக்காரப்படையினர் வணிகர்களிடையே விளையாடும் துன்பமிகு செயல்களை சொல்லி விட்டு 'வேளக்காரப் படைவீரர்களின் விளையாடல்களை இங்குள்ள சனங்கள் அவ்வளவாக வெறுக்கவில்லை. அவர்களுடைய

கொம்மாளத்தில் சனங்களும் சேர்ந்து சிரித்து குதூகலித்தார்கள்' என்று எழுதியிருப்பார். 'காவல் படையினர் எப்போதும் போல் கொள்ளையிட்டுக் கொண்டுதான் இருப்பர்; அவர்கள் வெள்ளைக்காரர்களின் படை என்றால் வெறுக்க வேண்டும்; சொந்த இந்தியப் படை என்றால் துன்பத்திலும் சிரிக்க வேண்டும்' என்பதே அதன் பொருள். அப்படி நாம் காவல் அத்துமீறல்களைக் கடந்து போய்விட முடியாது; கூடவும் கூடாது.

ஆனால் அதிகாரத்தில் உள்ளவர்கள் குற்றவாளிகளைப் பாதுகாக்க முனைந்தார்கள். முழுவதும் அம்பலப்பட்டு போன

பின்னரே நடவடிக்கை எடுத்தார்கள். எதிர்காலத்தில் வழக்கை எப்படி நடத்துவார்களோ தெரியாது.

இந்த நிகழ்வு நடப்பதற்கு சில நாள்களுக்கு முன்னர் ஒரு காவலர் ‘எல்லாவற்றுக்கும் எங்களையே குறை சொல்கிறீர்களே! நாங்களும் மனிதர்கள்தானே! எங்களுக்கும் குழந்தை குட்டிகள் இருக்கிறார்கள் அல்லவா? எங்கள் அதிகாரிகள் சொல்வதைத்தான் செய்கிறோம். அவர்கள் எங்களை படுத்துகிற பாட்டுக்கு நாங்கள் என்னதான் செய்ய முடியும்? எங்கள் கோபத்தை எங்கே காட்டுவது?’ என்று கேட்டதாக ஒரு தம்பி சொன்னார்.

உண்மைதான். அதனால்தான் நாம் காவல்துறை சீர்திருத்தம் வேண்டும் என்று மீண்டும் மீண்டும் கேட்கிறோம். சாத்தன்குளம் நிகழ்வுக்குப்பின் காவலர்களின் திருமண நாளுக்கு விடுமுறை அளிக்கிறார்களாம். என்னவொரு கண்துடைப்பு.

அரைக்கால்சட்டையில் இருந்த காவலர்களுக்கு முழுக்கால்சட்டை தந்து தன்மதிப்பை உயர்த்தினோம் என்றார்கள். காவல் அதிகாரிகளின் வீடுகளுக்கு பணியாட்களாக காவலர்களைப் பயன்படுத்தாதீர்கள் என்று கூறுகிறோமே கேட்டார்களா? மளிகை

வாங்குவதிலிருந்து துணி துவைப்பது வரை காவலர்களை வைத்து செய்து கொண்டே காவலர்களின் தன் மதிப்பை உயர்த்தி விட்டோம் என்பதில் என்ன பயன்? அப்படி அடிமை வேலை செய்கிற காவலர்களின் காவல் பணியையும் வேறு காவலர்கள் மிகு சுமையாகச் சுமக்க வேண்டியுள்ளதே! அந்த மன உளைச்சலை எப்படித் தீர்க்கப் போகிறீர்கள்?

காவல் உயர் அலுவலர்களுக்கு கேளிக்கைச் சங்கங்கள் உள்ளன. காவலர்களுக்கு அப்படி ஏதேனும் சங்க அமைப்பு உள்ளதா? தொழிற்சங்க உரிமைக்காக 1979இல் போராடிய

காவலர்களை இந்த அரசுகள் என்ன செய்தன என்பதை வரலாறு பதிந்து வைத்துக் கொண்டுதானே இருக்கிறது. தொழிற்சங்கம் அல்ல மனமகிழ் மன்றங்கள் வைத்துக் கொள்ளக் கூட காவலர்களுக்கு இசைவு இல்லை என்பது உண்மைதானே!

எட்டு மணிநேர வேலை கேட்டு போராட காவலர்களுக்கு இசைவு உண்டா? அல்லது எட்டு மணி நேர வேலை தர வேண்டும் என்று அதிகாரிகள் என்றாவது எண்ணியதுண்டா? தொடர்ந்து வேலை வாங்கும் சூழலில் பணி முடித்த பின் ஓய்வு தர வேண்டும் என்று எப்போதாவது எண்ணியதுண்டா?

செயலலிதாவின் வருகைக்காகப் பாதுகாப்புப் பணியில் இரண்டு மூன்று நாள்களாக இருந்த பெருமாள் என்ற காவலர் ஆர்க்காடு பாலத்தின் மீதே சுருண்டு விழுந்து இறந்தது தெரியாதா?

சட்டப்படியான வேலை தவிர சட்டப்புறம்பான வேலை எதையும் செய்ய ஏவக் கூடாது என்று எந்த அதிகாரியாவது (நேர்மையான காவல் அதிகாரி என்று பெயர் எடுத்தவர் உட்பட) சிந்தித்துண்டா?

இதையெல்லாம் 'மன உளைச்சலில் ஏற்பட்ட தாக்குதல்' என்று குற்றவாளிகளுக்கு வழக்குரைஞராக வந்த ஆளும் வகுப்பின் ஊதுகுழல்கள் எப்போதாவது

கேட்டதுண்டா? இவற்றையெல்லாம் கூட காவல் அத்துமீறல்களினால் அன்றாடம் தாக்கப்படும் நாம்தான் கேட்கிறோம்.

**அடிமைத்தனம் எங்கெல்லாம் நிலவுகின்றதோ அங்கெல்லாம் அவ்வடிமைத்தனத்திற்கு எதிராகப் போராடுவது குமுகப் பற்று உள்ளவர்களின் கடமை என்பதால் நாம் காவல் துறையில் சீர்திருத்தத்தைக் கேட்கிறோம்.**

இந்தியா விடுதலைப் பெற்று 73 ஆண்டுகள் ஆகின்றன என்கிறார்கள். ஆனால் தமிழ்நாட்டின் காவல்துறையின் 150 ஆண்டு விழாவைச் சில ஆண்டுகளுக்கு முன்னரே கொண் டாடினார்கள். எப்படி? வெள்ளையன் வைத்துக் கொண்ட அதே சட்டங்களைக் கொண்டு, வெள்ளையன் வைத்துக்

கொண்ட அதே காவல் அமைப்பினை வைத்துக் கொண்டு வெள்ளையன் போலவே அடக்குமுறை செய்வதற்குப் பெயர் விடுதலையா? என்று நாம் கேட்கிறோம்.

கடந்த காலங்களில் படிப்பறிவு குறைந்தவர்களை காவலர்களாக்கி காவல் நாய்களைப் பழக்குவதைப் போல் பழக்கி ஏவி விடுவதைப் போலவே இன்றும் செய்யலாம் என்று எண்ணுகிறார்கள். செய்கிறார்கள். ஆனால் இன்று பட்டப்படிப்பு படித்தவர்கள் கூட காவல் பணிக்கு வருகிறார்கள். பல்வேறு காரணங்களால் இந்தப் பணியைத் தேர்ந்தெடுத்தவர்களுக்கு அவர்கள் கற்ற கல்வி தன்மதிப்பை அறிமுகம்

செய்து வைத்திருக்கிறது. அதே நேரத்தில் அதிகாரத்தோடு மோதினால் ஏற்படும் விளைவுகளைப் பற்றிய அச்சத்தையும் அதே கல்வியே ஊட்டி வைத்திருக்கிறது. எனவேதான் மனதுக்கும் செயலுக்கும் இடையில் இட்டு நிரப்ப முடியாத இடைவெளியோடு பணி செய்ய வேண்டிய நிலை ஏற்படுகிறது. மன உளைச்சலும் ஏற்படுகிறது. அதிகாரிகளின் அழுத்தங்களினால் நேர்மையாகப் பணி புரிய முடியாத சூழலில் துணைக் கண்காணிப்பாளர் விட்ணுபிரியா போல் தற்கொலை செய்து கொள்ளத் தோன்றுகிறது.

காவல்துறை சீர்திருத்தங்கள் என்றால்

சீர்மிகு காவல்நிலையம் என்ற பெயர்ப்பலகையும், சிவப்பு வண்ணக் கட்டடத்திற்குப் பகரமாக நீலநிறக் கட்டடமும் அருமையான வரவேற்பு அறையும் என்று கட்டடங்களை மாற்றச் சொல்லவில்லை. அதிகார அமைப்பை மாற்றச் சொல்கிறோம். காவல் பயிற்சி முறைமைகளை மாற்றச் சொல்கிறோம்.

சட்டப்படியான அமைப்பான காவல்துறை, சட்டத்தைக் காக்க வேண்டிய காவல் துறை

**எந்த நிலையிலும் சட்ட மீறலில் ஈடுபடக் கூடாது**

என்று விழிப்போடு இருக்கக் கற்றுத் தர வேண்டும் என்கிறோம். அதிகாரப் படிநிலை தவிர்க்க முடியாது என்றாலும்

சட்டப்படியான ஏவல்களுக்கு மட்டுமே காவலர்கள் செவி சாய்ப்பதற்கான உரிமை வேண்டும் என்கிறோம். இது முறையன்று என்று முறையிடுவதற்கு காவலர்களுக்கு உரிமை வழங்க வேண்டும் என்று கேட்கிறோம். எல்லாவற்றிற்கும் மேலாக காவலர்களுக்கு தொழிற்சங்க உரிமை வேண்டும் என்று கேட்கிறோம். (மற்ற துறைகளில் தொழிற்சங்கங்களின் இன்றைய கையாலாகாத நிலை அறிந்துள்ள போதிலும் அந்த உரிமை கூட மறுக்கப்பட்டவர்களாகக் காவலர்கள் இருப்பதை எண்ணியே அவ்வாறு கேட்கிறோம்.)

குடும்பச் சூழ்நிலை என்று பணிக்கு

வந்த இளம் காவலர்களைப் பார்த்து ஒன்றைக் கூறிக்கொள்ள விரும்புகின்றோம். பாவேந்தர் கூறியது போல், தன்பெண்டு, பிள்ளை, சோறு, வீடு என்ற கடுகு உள்ளத்தோடு கூட வாழுங்கள்; அந்தக் குடும்பத்தைக் காக்க வேண்டும் என்றால் கூட போராடித்தான் ஆக வேண்டும் என்ற நிலை ஏற்பட்டுள்ளதை எண்ணிப் பாருங்கள். அடிமைகளாக இன்னும் எத்தனை நாளைக்குத்தான் இருக்கப் போகிறீர்கள்? நீங்கள் கற்ற கல்வி தன்னலக் கல்வியாக இருக்கலாம். ஆனால் தன்மதிப்பையும் தந்தது அக்கல்விதானே? அத்தன்மதிப்புக்கு

இழுக்கு நேரும் போது எதிர்த்துப் போராடுவது இயல்பும்தானே? அந்த இயல்போடு வாழுங்கள். உங்களைப் போலவே மாந்தர் அனைவருக்கும் தன்மதிப்பு உண்டென்பதை உணருங்கள். அவர்களின் மதிப்பைக் காப்பதும் உங்கள் கைகளிலேயே உள்ளதென எண்ணுங்கள். சாத்தன்குளங்கள் இனி ஏற்படவே ஏற்படாது.

பல ஆண்டுகளுக்கு முன் எம் தோழர் விவேக் ஒரு நிகழ்வில் குரலுயர்த்தி பாடிய இந்த பாடல் நினைவுக்கு வருகிறது.

***'மிசா வந்தது; நசா வந்தது; உன்னையும் செயில்ல போட்டாங்க!***

***நசா வந்தது; மிசா வந்தது; என்னையும் செயில்ல போட்டாங்க!***

***உனக்கும் எனக்கும் வித்தியாசமில்லே! ஓ.... போலீசண்ணா!***

***போராட்டம் தவிர வேறு வழியில்லே! ஓ..... போலீசண்ணா!'***

அதே நேரத்தில், மீண்டும் ஒன்றை நினைவூட்ட விரும்புகின்றோம். சாத்தன்குளம் படுகொலை மன உளைச்சலிலோ, அதிகார நிலை நிறுத்தல் நடவடிக்கையிலோ நிகழ்ந்தது அன்று. அது திட்டமிட்ட படுகொலை; ஆதாயத்திற்காக நடந்த கொலை. அந்நிகழ்வில் ஈடுபட்ட

காவல்துறையினர், காவல் நண்பர்கள் ஆகியோரும் அவர்களுக்குத் துணை நின்ற மருத்துவத் துறையினர், சிறைத்துறையினர் ஆகியோரும் கடுமையாக தண்டிக்கத் தக்கோர் என்பதைத் தெரிவித்துக் கொண்டு அவர்களுக்கு தக்க தண்டனை கிடைக்க விழிப்போடிருந்து வினையாற்றுவோம் என
தமிழ் அறம் அறிந்த அனைவரையும் அழைக்கிறோம்.

**- தமிழ்.முகிலன்**